# தேடிக்கண்டு கொண்டேன்

மனமும், உடலும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள். **மனம்** - சூஷ்ம உடல். **உடல்** - ஸ்தூல மனம்.

இந்தப் பிரபஞ்சம் நம் மனதின் வெளிப்பாடே.

நம் உடலை கண்ணுக்குத் தெரியாத பல்வேறு எண்ணங்களின் எழுச்சியாகிய கண்களுக்குத் தெரிகின்ற திட வடிவம் என்று கூறலாம். அதாவது கண்களுக்குப் புலப்படாத நீராவியாகிய பல்வேறு எண்ணங்களின் உறைந்த நிலையே இந்த திட உலகம் என்றும் கூறலாம்.

அதாவது, நமது எண்ணங்களே வாழ்க்கை. எண்ணங்களே உலகம். எண்ணங்களே எல்லாமும் எனலாம்.

ஆக, அந்த எண்ணங்களால் எழுந்த நம் மனதை எப்படி வைத்திருக்கிறோம்? என்பதில்தான் எல்லாமே அடங்கியிருக்கின்றது. அதாவது, ஏராளமான எண்ணங்களே '**மனம்**' எனலாம்.

ஆக, அந்த எண்ணங்களையெல்லாம் செம்மைப்படுத்தினால், நமது வாழ்க்கையும் செம்மையாகும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

அதாவது ஒரு சாதரண கயிற்றினால் மிகப்பெரிய தேர் ஒன்றைக்கட்டி இழுக்க முடியுமா? என்றால், முடியாது. ஆம்! அதில் கட்டப்பட்ட கயிறு அறுந்துவிடும்.

அதுவே, ஆயிரமாயிரம் கயிறுகளை எல்லாம் ஒன்றாகத்திரட்டி, அவைகளைக் கொண்டு, ஒரு தடிமனான கயிறாக மாற்றி, அதனைக்கொண்டு அந்த பெரிய தேரைக்கட்டி இழுக்க முடியும். ஆக, அந்த சாதாரண கயிறு போன்றதுதான் நம் '**ஒரு எண்ணம்**' என்றால், பல்வேறு கயிறுகள் ஒன்றிணைக்கப்பட்டதுப்போன்று, ஏராளமான எண்ணங்களின் ஒட்டு மொத்த தொகுப்பு நமது "**மனம்**" என்றும் கூறலாம்.

பொதுவாக, எண்ணங்கள் எல்லா திசைகளிலும், ஆயிரமாயிரம் ஆசாபாசங்களுடன் நம் மனதில் அலைப்பாய்ந்துக் கொண்டேயிருக்கிறது. அதனால், நம்முடைய அத்தனை சக்தியும் வீணாகிறது. அதுவே, ஒரு விவேகிக்கு அந்த சக்தியை வீணாக்காமல், மடை மாற்றிப் பயன்படுத்த முடிகின்றது.

பொதுவாக, நாம் பயணம் செய்யும் ஒரு தேரில் கட்டியிருக்கும் ஐந்து குதிரைகள் ஐந்து திசைகளில் அந்த தேரை இழுத்தால், நம் பயணம் என்னவாகும்?

யோசித்துப் பாருங்கள்?

அதாவது, இந்த உடல் என்ற தேரில் ஒருவன் (ஆன்மா) பயணம் செய்கிறான். அந்த தேரை சரியாகச் செலுத்த தேரோட்டி (புத்தி) என்ற ஒருவனும் தேவைப்படுகின்றான். மேலும், அந்த தேரில் பூட்டப்பட்ட குதிரைகளை (ஐம்புலன்கள்) சரியாகக் கையாளக்கூடிய கடிவாளம் (மனம்) என்பதையும், அந்த தேரோட்டி தன் கையில் பிடித்திருக்கின்றான். அந்த கடிவாளத்தைக் கொண்டுதான், தேரோட்டி தேரை சரியாக இயக்கமுடியும்.

ஆம்! அந்த கடிவாளம்தான் **மனம்.**

அந்த தேரோட்டியாகிய புத்தி, தேரை (உடலை) சரியாக செலுத்த வேண்டியதினால், அந்த ஐந்துக் குதிரைகளின் (புலன்களின்) கடிவாளத்தைக் (மனதை) கண்டிப்பாக பிடித்திருக்க வேண்டும். பிடியை விடும்போது, குதிரைகள் சுதந்திரமாக ஓடும்.

ஆகவே, உடல் என்ற தேரிலே, ஐந்து புலன்கள் என்ற குதிரைகள் (ஐம்புலன்கள்) அந்த தேரை இழுக்கின்றன. அந்த தேர் (உடல்) செல்லும் பாதைகள் (உலகியல் விஷய சுகங்கள்) பலவாறாக உள்ளன.

ஆகவே, உடல் என்ற தேர்ப்பயணம் சரியாக இருக்க வேண்டுமானால், அந்தக் கடிவாளம் (மனம்) சரியாகக் கையாளப்பட வேண்டும். கடிவாளம் (மனம்) முறையாகக் கையாளப்படவில்லை எனில், அந்த குதிரைகள் (புலன்கள்) கட்டுப்பாடு இழந்து, கண்டபடி தடம் மாறிப்போய், அந்த தேரை (உடலை) படுகுழியில் தள்ளவும் வாய்ப்புகள் உள்ளது.

ஆகவே, நம் '**உடல்**' என்ற தேர், '**புத்தி**' என்ற தேரோட்டியின் கையில் உள்ளது. அந்த புத்தி என்ற தேரோட்டியோ, '**ஐம்புலன்கள்**' என்ற குதிரைகளைக் கொண்டுதான் தேரை இயக்குகின்றான். ஆனால், அந்த குதிரைகளோ (ஐம்புலன்கள்) '**மனம்**' என்ற கடிவாளம் கொண்டுதான் கட்டுப்படுத்தப்படுகின்றன.

ஆகவே, **ஐம்புலன்கள்** என்ற குதிரைகள் சரியாக ஓட வேண்டுமானால், அவைகள் கட்டப்பட்டுள்ள **மனம்** என்ற கடிவாளத்தை, **புத்தி** என்ற தேரோட்டி சரியாகக் கையாள வேண்டும். அப்போது மட்டுமே, **ஆன்மா** என்ற அந்த தேரின் (உடலின்) உரிமையாளன் ஊர் போய் சேர முடியும்.

ஆகவே, உடல் என்ற தேர் நன்றாக ஓட வேண்டுமானால், மனம் என்ற கடிவாளம் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும்.

ஆக, மனம் எப்பொழுதும் நிகழ்காலத்தின் கட்டுப்பாட்டில்தான் கட்டாயம் இருக்க வேண்டும்.

ஆனால், நம்முடைய மனமோ எப்பொழுதும் இறந்தகாலத்திலும், எதிர்காலத்திலுமே இருக்கிறது. அதாவது, நம் மனம் நிகழ்காலத்தில் இருப்பது சில விநாடிகள் மட்டுமே எனலாம்.

நம் உடலும், மனமும் ஒருசேர நிகழ்காலத்தில் நிச்சயம் இருக்கமுடியுமானால், அந்த உடல் என்ற தேரின் பயணத்தில் பல அற்புதங்கள் நிகழும்.

அவ்வாறு, நிகழ்காலத்தில் வாழ்கின்ற சித்தர்களின், ஞானிகளின் சந்நிதியில் அற்புதங்கள் நிகழ்வது இவ்வாறுதான் சாத்தியமாகின்றது.

அதாவது, அவர்கள் தங்கள் மனதை அப்போதைய நிகழ்வின் கட்டுப்பாட்டில் கட்டாயம் வைத்துக் கொள்கிறார்கள். அவ்வாறு எப்பொழுதும் நிகழ்காலத்தில் இருக்கும் ஒருவருக்கு மனம் கட்டுப்படுகின்றது. எனவே, மனம் அவர்களால் கையாளப்படும் ஒரு கருவி. அவ்வளவுதான்.

அந்த மனதை எப்போது?, எப்படி? உபயோகிக்க வேண்டும் என்பதை அவர்கள் அறிந்து வைத்துள்ளார்கள். அதனால்தான் அவர்கள் ஆனந்தமாக இருக்கின்றார்கள்.

. ஆனால் நம்முடைய மனம் நம் கட்டுப்பாட்டில் இருக்கின்றதா? இல்லையே! அது போகுமிடத்துக்கெல்லாம் அல்லவா? நாம் போய்க் கொண்டிருக்கிறோம்.

மனம் ஒருமுகப்பட்டால் என்ன நடக்கும்?

நம்முடைய உடலில் இரசவாதம் நிகழும். அமிர்தம் சுரக்கும்.

உடல் நாம் சொன்னபடி கேட்கும். உலகம் நம் பின்னால் வரும்.

நாம் சொல்வது தேவ / வேத வாக்காகும்.

நம்மைச் சுற்றி அனேக அற்புதங்கள் நிகழும்.

பொதுவாக, இந்த உடல் என்பது ஜடப்பொருளாகும். அதில் ஆற்றல் என்பது உயிராகும். இவைகள் அனைத்திற்கும் இயக்கம் என்பது மனமாகும். சுருங்கக்கூறினால், நம்மிடம் உள்ள ஒரு கணினியை எடுத்துக் கொண்டோமானால், அந்த கணினி (கம்ப்யூட்டர்) என்பது **நம் உடல்.**

அந்த கம்ப்யூட்டர் (உடல்) இயங்கத் தேவையான ஆற்றல் என்பது மின்சாரம். அதுவே, உடல் இயங்கத் தேவையான **உயிர்** ஆகும். ஆக, மின்சாரம் (உயிர்) இருந்தால்தான் கம்ப்யூட்டரில் (உடல்) உள்ள சாப்ட்வேர்கள் (செயலி, மென்பொருட்கள்) மூலம், அந்த கணினி இயங்கும். அந்த செயலியே (சாப்ட்வேர்) இந்த **மனம்** ஆகும்.

இதையே, உயிரியல் நீதியாகப் பார்த்தோமானால், உடல் என்பது பல்வேறு அணுக்களின் கூட்டமைப்பில் உண்டான ஒரு ஜடப்பொருள் எனலாம். அதாவது, இந்த உலகிலுள்ள அனைத்து பொருட்களும் அணுக்களால் ஆனது. அந்த ஒவ்வொரு அணுக்களிலும் அதை இயக்கும் ஒரு சக்தி உள்ளது. அந்த அணுவை அசையாத '**சிவம்**' என்றும், அதன் உயிரை அசைகின்ற '**சக்தி**' என்றும் கூறுகின்றோம்.

அதாவது, ஒரு ஆணு கூட இல்லாத வெட்டவெளியாகிய இந்த வளி (வெளி) என்பது '**ஆன்மா**' என அறியப்படுகின்றது. அது, தனித்து நிற்பது. எங்கும் நிறைந்திருப்பது. எல்லையற்றது. குணங்களற்றது. மலங்களற்றது. அப்படிப்பட்ட அந்த வெளியாகிய ஆகாயத்தின் வெளிப்பாட்டில் விளைந்ததுதான் இந்த பஞ்சபூதங்கள் எனப்படுகின்றது.

ஆவைகள், **ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், மண்** என்று கூறலாம்.

ஆகாய பூதத்திலிருந்து, உண்டான காற்று, வினைபுரிந்து அணு உண்டாயின, அந்த அணு, வினைப்புரிந்து, இரண்டு அணுக்கள் ஆனது. இவ்வாறு, பல அணுக்கள் ஒன்றிலிருந்து ஒன்றாக உண்டாயின. அத்தகைய பல அணுக்களின் கூட்டமைப்பாகிய உயிரியல் மூலங்களின் பரிமாணமே, இங்கு அனைத்து உயிரினங்களாக உள்ளது. அதிலே, உயிர் என்பது உயிரினங்களிடம் உள்ள ஆற்றல் என்றே கூறலாம்.

அந்த உயிரினங்களின் **பரிணாமம்** என்பது, ஆகாய பூதத்தின் சேர்க்கையைச் சார்ந்து, **ஒரு அறிவு** முதல் **ஆறு அறிவு** வரை பரிணாமம் அடைகின்றது. இது ஒரு நாளில், ஒரு சில மணி நேரங்களில் உண்டாகி, முடிவதல்ல. பல நூறு ஆண்டுகளாக உயிரியல் பரிணாமம் நடைப்பெறுகின்றது. அதிலே, படிப்படியாக நிகழ்ந்த மாற்றங்களில் உண்டான உயிரினங்களில் மேம்பட்ட மனித உடலில் மட்டுமே, ஆகாய பூதத்தின் அறிவு நிலை அறியப்படக்கூடிய, ஆறாவது அறிவு நிலைக்கு உயர்த்தப்பட்டு, மனித உடலில் உள்ள ஐம்புலன்களின் அடிப்படையில் அனைத்தும் அறியப்பட்டு, அதற்கு ஆதாரமான '**மனம்**' ஆறாம் அறிவு நிலைக்கு உயர்த்தப்பட்டு, உயிரியல் பரிணாமங்களில் மனிதன் மட்டுமே '**ஆறாம் அறிவு**' கொண்டு தன்னை அறிய முடிகின்றது.

ஆக, அணுக்களின் கூட்டமைப்பாகிய இந்த மனித உடல் என்பது, ஐம்பூதங்களின் சேர்க்கையாகிய உயிர் சக்தியின் ஆற்றல் கொண்டு, '**மனம்**' என்ற பரிணாமத்தில், ஆறாம் அறிவு நிலைக்கு உயரும்போது, புத்தி விழிப்படைந்து விடுகின்றது. ஆக, அவனிடமுள்ள அந்த புத்தி சக்தியே அனைத்தையும் அறியக்கூடிய அறிவாக (ஆன்மாவாக) உள்ளது.

ஆன்மீகரீதியாக பார்த்தோமானால், "**அறிவு**" (மனம் - புத்தி) என்ற '**ஆன்மா**' ஆகாயம் (வெளி) என்பதினால், அறிவுப் பரிணாமத்தில் பஞ்சபூதங்களின் சேர்க்கையினால், படிப்படியாக, இந்த மனம் ஒரு அறிவு தாவர உடலில், தொடுவுணர்வு என்ற ஒரு புலன் தொடங்கி, மனிதன் வரை படிப்படியாக புலன்களால் மேம்பட்டு, ஆறாம் அறிவாக மனம் என்ற ஒன்றை (ஆன்மா - இறைவன்) அறியும்போது மட்டுமே மனிதன் புனிதனாக மாறுகின்றான்.

அந்த புனித நிலைக்கு உயர்ந்த மனிதர்கள் மத்தியிலே மணிவாசகப்பெருமான் புல்லாகிப் பூடாய்ப், புழுவாய், மரமாகிப் பல் விருகமாகிப், பறவையாய்ப் பாம்பாகிக் கல்லாய், மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய் வல் அசுரர் ஆகி, முனிவராய்த் தேவராய் என எல்லா அறிவுப்பரிணாமத்தில் பயணித்து வந்ததை பாட முடிந்தது.

அதாவது, மனிதன் மட்டுமே, இந்த பிரபஞ்ச சக்தியின்மூலம் ஐம்பூதங்களின் வழியாக, அனைத்தையும் பல எண்ணங்களாக ஏற்றிக்கொண்டு, ஒவ்வொரு நொடிகளும் பல்வேறு தகவல்களின் அடிப்படையில், ஐம்புலன்களின் வழியாக அனைத்தையும் அறிந்துக்கொண்டு, மனதை மகத்தானதாகவும் மாற்ற முடிகின்றது.

அந்த மனம் பக்குவப்பட வேண்டுமானால், பகுத்தறிவு பிரகாசிக்க வேண்டுமானால், மனதை மகத்தான நிலைக்கு மனிதன் உயர்த்தியாக வேண்டும்.

உதாரணமாக, நம் முன்னால், அனேக புத்தகங்கள் உள்ளன என்றால், அதில் ஏதேனும் ஒன்று மட்டும்தான் நமக்குப் பிடிக்கும். அதைத்தான் நாமும் படிக்க விரும்புவோம். ஆனால், நாம் வெறுக்கின்ற நமக்குப்பிடிக்காத ஒரு புத்தகத்தை மற்றொருவர் விருப்பமாகப் படிக்கலாம்.

இவ்வாறு, ஒவ்வொருவருடைய மனமும் தனித்தனியாக **விருப்பு - வெறுப்பு** என்ற இருமைகளில் இருப்பதற்குக்காரணம், அவர்களது சித்தத்தில் சம்ஸ்காரங்கள் எப்படிப் பதியப்பட்டுள்ளனவோ? அதற்கேற்றவாறு அவர்கள் மனம் மாறுபட்டு காணப்படும்.

அதாவது, ஒருவனின் ஒவ்வொரு செயலும், அவனது மனதில் வெளிப்பட்ட எண்ணங்களுக்கு ஏற்றவாறு இருப்பதினால், அதற்கான வினைப்புரிதலும், அதன் விளைவாக உண்டான விளைவுகளும், அவனது அனுபவமாக மாறிவிடுகின்றது. அவ்வாறு, அவனது அனுபவமே மனதின் ஒன்று சேர்ந்த அவனது குணம் என்றும், அந்த குணமே அவனது மனம் என்றும் கூறப்படுகின்றது.

அவனிடமுள்ள குணங்களின் அடிப்படையில் அழுத்தம் பெறுகின்ற எண்ணங்கள் ஆனது, அவனது ஆசையாக மாறுகின்றது. அந்த ஆசைகள் மூலம் அவனுக்கு சுக, துக்கங்கள் உண்டாகி விடுகின்றது.

இன்னமும் எளிதாக கூறவேண்டுமானால், ஒருவன் தன்னிடமுள்ள ஐம்புலன்கள் வழியாக கிடைக்கின்ற தகவல்களைக் கொண்டு, பகுத்தறிவின் மூலம் அதாவது, புத்தியைக் கொண்டு, செய்கின்ற செயல்கள் எல்லாமே, அவனது புத்தியின் அடுத்தகட்ட பரிமாணமான ஒவ்வொரு புதிய செயலிலும் வெளிப்படுகின்றது.

அதாவது, ஒருவன் சிறு குழந்தையிலிருந்து புதிது, புதிதாக பார்க்கின்ற, கேட்கின்ற, கற்றுக்கொள்கின்ற அனைத்தும் நிகழ்வுகளின் நிகழ்ச்சிகளாக மாறும்பொழுது, அனிச்சையாக உள்ளிருந்து வெளிப்படுகின்ற ஒருசக்தி அல்லது இயக்கம் என்பதே **“மனம்”** எனப்படுகின்றது.

அதாவது, மனம் என்பது ஒரு அனிச்சை செயல் செய்ய வைக்கின்ற **சக்தி** என்பதினால், அதை அறிவுடன் (சிவத்துடன்) இணைத்துக்கொண்டு இயங்க ஆரம்பித்தலே **மோக்ஷம்** அல்லது **பரப்பிரம்ம நிலை** எனப்படுகின்றது.

அதாவது, நாம் மட்டுமே உணரக்கூடிய விசய, சுகங்களைக் கூட, மற்ற அறிவு குறைபாடு கொண்ட ஐந்தறிவுக்குட்பட்ட ஜீவராசிகள் உணர முடியாத சூழலில், மனிதர்களாகிய நாம் மட்டும் நம் உண்மை சொரூபமாகிய பரப்பிரம்ம நிலையை அடையும்பொழுது, நம் உணர்ச்சிகளுக்கு அப்பாற்பட்டு, நம் ஐம்புலன்களுக்கும் எட்டாத, சில அரிய விசயங்களையும் நம்மால் உணர முடிகின்றது.

அதுவே, **'ஜீவன் முக்தி நிலை'** என்பதாகும்.

அதன்மூலம், அதிகப்படியான ஆற்றல்களை நாம் அனுமானிக்கலாம் என்பதை நமக்கு அறிவுறுத்துவதே **"ஆன்மவியல்"** என்ற **'மெய்ஞானம்'** போதிக்கும் பாடங்களை மனம் பயில்வதினால், அது மேல்நிலையாகிய **'அறிவு'** நிலைக்கு ஆட்படுகின்றது.

எனவே, நம் மனதை நாம் எந்தளவுக்கு, **தன்னகத்தில் ஒடுக்குகின்றோமோ,** அந்த அளவிற்கு நாம் இந்த பிரபஞ்சத்தில் பேரறிவாக விரிவடைகின்றோம். அதேசமயம், நம் மனமானது பிராண வாயுவாகிய உயிரின் துணையுடன் இயங்குகின்றது என்பதினால், மூச்சு அசைவும், மனதின் அசைவும் ஒத்திசைவாகவே உள்ளதினால், ஒவ்வொருவரும் மூச்சை அடக்கும் பிராணாயாமம் பயிற்சிகளை மேற்கொள்கின்றனர்.

ஆனால், அவர்கள் மூச்சை நிறுத்த முயற்சித்தாலும், மனதை (பேச்சை) நிறுத்த முயற்சித்தாலும் மடிந்து விடுவார்கள் என்பதினால், மனமடங்கும் மார்க்கம் அறியாமல், முக்தி வாய்ப்பது இயலாது.

**மனமென்னும் மாடு அடங்கில் தாண்டவக்கோனே - முத்தி**
**வாய்த்ததென்று எண்ணேடா தாண்டவக்கோனே**
**சினமென்னும் பாம்பு இறந்தால் தாண்டவக்கோனே - முத்தி**
**சித்தியென்றே நினையேடா தாண்டவக்கோனே**

- இடைக்காட்டு சித்தர்.

ஆக, மனம் என்ற மாடு, அறிவு என்ற ஆன்மாவிடம் அடங்காமல், அறிவுப் பரிணாமத்தின் மேல்நிலையாகிய தெய்வீக நிலைக்கு மனிதன் உயரவே முடியாது.

எனவே, **'மனதைப் பிடிக்கிறேன்!', 'மனதை அடக்குகிறேன்!'** என்று அலைப்பாய்கின்ற மனதை மேலும், மேலும் பல்வேறு புதிய பயிற்சிகளில் பயிற்றுவிப்பதினால், பலன் ஒன்றுமில்லை. அதுப்போலவே, வெறுமனே கண்களை மூடிக்கொண்டு, தன்னால் ஏற்றி வைத்துக்கொண்ட ஏராளமான எண்ணங்களால் எழுந்த மனம் எங்கே இருக்கிறதென்று, தன்னுள்ளேயே தேடுபவனும், அதே மனதின் துணைக்கொண்டுதான் தேடுகிறான் என்பதை

அறியும்போது மட்டும்தான், அதை அறியும் "**அறிவு**" எதுவோ, அதுவே இறைவ**(நா)**ன் என்பதை உணர்கின்றான்.

**தேடிக் கண்டுகொண்டேன் - திரு**
**மாலொடு நான்முகனும்**
**தேடித் தேடொணாத் தேவனை**
**என்னுளே தேடிக் கண்டுகொண்டேன்.**

- திருஅங்கமாலை
(அப்பர் தேவாரம்).

ஓம் தத் ஸத்!

